31st December 1950 THE SHIVAJI TAMIL WEEKLY.

# சிவாஜி



## ஏசு பிறந்த நாள்

அன்பும் அமைதியும் ஆனந்தமும் மிகுந்து
துன்பம் மறந்துவிடும் தூயஎளி யோர்குடிலில்
இன்பம் பெருகிடவே இறங்கிவரு வானிறைவன்
என்று மறை சொல்வதெலாம் எள்ளளவும் பொய்யாமோ
அன்றிரவில் இன்றிரண்டா யிரமாண்டின் முன்னாலே
அவதரித்தான் அவன்பரமன் அன்புத் திருக்குமரன்
கன்னிமரியாள் மகவாய்க் காசினியிலே சிறந்த
கருணைமுனி ஏசுபிரான் காண் தொழுவத்தே பிறந்தான்.

'The Shivaji' Weekly




Published Every Sunday
BIG BAZAAR TRICHINOPOLY



# ஜனகணிதி விசேஷ தகவல்கள்

## பொருளாதாரப் புள்ளி விவரத்தில் முக்கிய கவனம்

### 1½ கோடி ரூபாய்தான் செலவு

இந்தியாவில் நடக்கும் ஜனத்தொகைக் கணக்கெடுப்புதான் உலகத்திலேயே மிகப்பெரியதும் செலவில் குறைந்ததுமான கணக்கெடுப்பு என்று கூறப்படுகிறது. (இந்தியாவை விட ஏராளமான ஜனங்கள் உள்ள சினாவில் திட்டவட்டமான முறைப்படி விஞ்ஞான ரீதியில் இனிமேல்தான் ஜனத்தொகைக் கணக்கெடுப்பு நடத்தப்பட வேண்டும்). இந்த நாட்டின் குடிஜனங்களான சுமார் 35,00,00,000 பேர் சம்பந்தமாகவும் எண்ணிக்கை சேகரித்துத் தகவல்களைப் பதிவு செய்வதற்கான பூரா ஏற்பாட்டுக்கும் சுமார் 1,50,00,000 ரூபாய் செலவு பிடிக்கும்; அதாவது ஜனத்தொகையில் ஒவ்வொரு ஆயிரம் பேருக்கும் 43 ரூபாய் வீதம் செலவாகும். அமெரிக்காவில் 1950-ம் வருஷத்திய ஜனத்தொகைக்கணக்கெடுப்புக்கு ஆயிரம் பேருக்கு 600 டாலர் வீதம் (1 டாலர் சுமார் 4·77 ரூ.) செலவிடப்பட்டதாக மதிப்பிடப்படுகிறது.

இந்தியாவில் ஜனத்தொகைக் கணக்கெடுப்புச் செலவு இவ்வளவு குறைவாக இருப்பதற்கு, மக்களின் எண்ணிக்கையைத் தொகுத்து, அவர்கள் சம்பந்தமான தகவல்களைப்பதிவு செய்யும் ஊழியர்கள் இந்த வேலைக்காக எவ்வித ஊதியமும் இல்லாமல் உழைத்து வருவதுதான் காரணம். ஊதியமின்றி சேவை செய்யும் இவர்களில் பெரும்பாலோர் ராஜிய சர்க்கார் சிப்பந்திகளாகவோ ஸ்தல ஸ்தாபன ஊழியர்களாகவோதான் இருப்பதால் மத்திய சர்க்காருக்கு அதிக செலவில்லாமல் போகிறது.

தேசத்திலுள்ள 35 கோடிப் பேர் சம்பந்தமாகவும் ஜனத்தொகை பற்றியும் இதர அடிப்படைத்தகவல்கள் பற்றியும் விபரம் விசாரித்து அவ்வளவையும் பதிவு செய்யும் பிரம்மாண்டமான வேலையானது, 1951 பிப்ரவரி 9உ சூரியோதயத்தில் தொடங்கி 1951 மார்ச் 1உ யன்று முடிவாகும் 20 நாட்களாகப் பரவலாய் நடைபெறும். குறிப்பெழுதும் ஒவ்வொரு ஊழியரும் ஒரு சில வீடுகள் அடங்கிய ஒவ்வொரு தொகுதிக்குப் பொறுப்பாக இருப்பார்; குடித்தனக்காரர்களின் சௌகரியத்துக்கேற்றபடி அந்தந்த வீடுகளுக்கு வந்து கணக்கெடுக்க வசதி இருக்குமாறு அவர் இந்த இருபது தினங்களுக்கும் தமது நடவடிக்கைத் திட்டத்தை அமைத்துக்கொள்வார். எண்ணிக்கை எடுக்கும் வேலை பூர்த்தியான பின், 1951 மார்ச் மாதத்தின் முதல் மூன்று நாட்களிலும் தேசம் பூராவிலும் அது இறுதியாகச் சரிபார்க்கப்படும்.

ஜனங்களின் எண்ணிக்கையைக் குறித்துக் கொள்வதும் இதர தகவல்களைப்பதிவு செய்வதும் சாத்தியமான அளவுக்கு மிகத் துல்லியமாக இருப்பது அவசியம். எண்ணிக்கை குறித்தெழுதப்படும்போது சேகரிக்கும் தகவல்களைப் பொறுத்துதான் எல்லாக் காரியங்களும் அமையுமாதலால் இது மிகவும் முக்கியமாகும். எண்ணிக்கை குறிப்பிடும்போது குறிப்பெழுதுபவர் தம் பொறுப்பிலுள்ள ஒவ்வொரு தொகுதியிலும் வசிக்கும் ஒவ்வொரு நபர் சம்பந்தமாகவும் தகவல் பதிந்துகொள்ளும் சீட்டுத்தாள் ஜனத்தொகைக் கணக்கெடுப்பு அட்டவணைக்கும் புள்ளிவிவரத் தொகுப்புக்கும் அடிப்படையாக இருக்கும். எந்தத்தேசியத் திட்டமும சரி அல்லது மக்கள் நலனுக்காக அமுல் செய்யப்படும் எந்த ஏற்பாடும் சரி ஜனத்தொகைக் கணக்கெடுப்பு விவரங்களைத்தான் அடிப்படையாகக் கொண்டிருக்கும். எனவே, ஆரம்பத்தில் குறிப்பெழுதும்போது விவரங்களைப் பதிவு செய்யும் வேலையில் எவ்விதமேனும் பழுதேற்படுமானால், தேசியத் திட்டவகுப்பும், சர்க்கார் மேற்கொள்ளும் க்ஷேமநல நடவடிக்கைகளும் அந்த அளவுக்குப் பாதகமடையும் என்பது விளங்கும்.

ஆகையால், ஜனத்தொகைக் கணக்கெடுப்பை மனிதப்பிரயத்தனத்துக்கு எவ்வளவுக்குத் துல்லியமாகவும் பரிபூரணமாகவும் இருக்கும்படி பார்த்துக் கொள்ள தீர்க்கமாக ஆராய்ந்த முன்னெச்சரிக்கை ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. இருப்பினும், ஜனத்தொகைக் கணக்கெடுப்பு பரிபூர்ணமாகவும் துல்லியமாகவும் இருப்பது பொதுஜனங்களின் ஆர்வத்தையும் ஒத்துழைப்பையும்பொறுத்துதான் இருக்கும் என்பது வெளிப்படை; ஜனத்தொகைக்கணக்கெடுப்புக் கேள்விகளுக்குக் குடிஜனங்கள் என்னென்ன பதில்களைத் தெரிவிக்கிறார்களோ அவைகளைத்தானே குறிப்பெழுதுபவர் எழுதிக்கொள்ள முடியும்; எனவே பொதுஜன ஒத்துழைப்பு அவசியம் என்பது தெளிவு.

கணக்கெடுப்பு எல்லா இடத்திலும் பூராவாக நடைபெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை ஜனத்தொகை கணக்கெடுப்பு அதிகாரிகள் செய்திருக்கிறார்கள். இந்திய எல்லைக்குட்பட்ட பிரதேசம் முழுவதும்—கிராமாந்தரமும் நகர்ப்புறமும்—லட்சக்கணக்கான கணக்கெடுப்புத்தொகுதிகளாகப்பிரிக்கப்பட்டிருக்கிறது; ஒவ்வொரு தொகுதியும் குறிப்பெழுதும் ஊழியர் ஒருவருடைய பொறுப்பில் இருக்கும். ஒவ்வொரு தொகுதியிலும் உள்ள ஒவ்வொரு வீடும் குடித்தனமும் அது மாளிகையாயினும் சரி, மண் குடிசையாயினும் சரி, கூடாரமாயினும் சரி, குடிலாயினும் சரி, எதெல்லாம் மக்கள் குடியிருக்கும் இடமாகப்பயன்படுத்தப்படுகின்றதோ அதெல்லாம் இலக்கமிடப்படுகிறது. அவைகளில் வசிக்கும் மக்கள் எல்லாரும் கணக்கெடுக்கப்படவேண்டும்; அதுவும் அவர்கள், சகஜமாக வதியும் இடத்தில் கணக்கெடுக்கப்படவேண்டும். சென்சஸ் கமிஷனர் வலியுறுத்தியுள்ளதுபோல், ஒவ்வொரு ப்ரஜையும் தாம் ஒரு தடவை கணக்கெடுப்பில் சேர்த்துக்கொள்ளும்படி—ஒரேயொரு தடவை மட்டிலும் சேர்த்துக் கொள்ளப்படும்படி — பார்த்துக்கொள்வது அப்பிரஜையின் கடமைப் பொறுப்பாகும்.

குடியிருப்பிடமில்லாதவர்கள் சம்பந்தமாக 1951 மார்ச் 1உ சூரியோதயத்திற்கு முந்தின இரவில் எண்ணிக்கைக் கணக்கெடுப்பதற்கு விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஊருராய் அலைந்து திரியும் குடிகள், சாதுக்கள், பிச்சைக்காரர்கள், நடைபாதை வாசிகள் முதலியோர் அன்றிரவில் எங்கே தூங்கிக் கொண்டிருக்கிறார்களோ அங்கே கணக்கெடுக்கப்படுவார்கள்.

(7 ம்பக்கம் பார்க்க)

## பழங்குடிமக்களின் ஜனத்தொகை

**1941**-ம் வருஷ ஜனசங்கியைக் கணக்குப்படி இந்தியாவில் உள்ள பழங்குடி மக்களின் ஜனத்தொகைக் கணக்கும் சமீபத்தில் ஜனாதிபதி உத்திரவின்படி வெளியிடப்பட்ட மதிப்பீட்டிற்கும் உள்ள வித்தியாசத்தின் காரணங்களை, பார்லிமெண்டில் ஸ்ரீ காமத் கேட்ட கேள்விக்கு பதிலளிக்கையில் உள்நாட்டு மந்திரி சர்தார் வல்லபாய் படேல் விளக்கிக் கூறினார் :-

1941-ம் வருஷ ஜனசங்கியைப்படி, இந்திய யூனியனைச் சேர்ந்த எல்லா ராஜ்யங்களிலும் உள்ள பழங்குடி மக்களின் ஜனத்தொகை 248 லட்சம். 1950 செப்டம்பர் 28, அக்டோபர் 5 தேதிகளிட்ட ஜனாதிபதி உத்திரவின்படி, 'ஏ' 'பி' ராஜ்யங்களில் உள்ள பழங்குடி மக்களின் ஜனத்தொகை 179 லட்சம்.

காரணங்களை விளக்கி உள்நாட்டு மந்திரி கூறியதாவது :-

1941 ஜனசங்கியைக் கணக்கில் பழங்குடி மக்கள் என்று சேர்க்கப்பட்ட பலஜாதிகளைச் சேர்ந்தவர்கள், (2 ஷெட்யூல் குடிமக்கள் சம்பந்தமான) 1950-ம் வருஷத்து உத்திரவின்கீழ் சமீபத்தில் வெளியிடப்பட்ட பழங்குடி மக்கள் ஜாபிதாவிலிருந்து முழுவதுமோ ஓரளவோ விலக்கப்பட்டிருக்கிறார்கள். அப்படி விலக்கப்பட்ட ஜாதியினர் கீழ்க்கண்ட ஐந்து வகைகளைச் சேர்ந்தவர்களாவர் :-

(1) புராதன மக்களாகவுமில்லாமல், பிற்போக்கானவர்களாவுமில்லாமல், 1931-ம் வருஷத்திலேயே நடத்தப்பட்ட பிரத்யேக விசாரணையை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்ட "புராதன மக்கள்" ஜாபிதாவில் சேர்க்கப்படாதவர்கள். ராஜஸ்தானித்திலுள்ள 'மியோ' ஜாதியினரும், அஸ்ஸாமிலுள்ள 'அஹோம்' ஜாதியினரும் இந்த வகைக்கு உதாரணங்கள்.

(2) 1936-ம் வருஷத்து இந்திய சர்க்கார் (மாகாண சட்டசபைகள்) உத்திரவின்படி 'பிற்போக்கான மக்கள்' ஜாபிதாவில் சேர்க்கப்படாதவர்கள். அஸ்ஸாம் தேயிலைத் தோட்டத்தில் தொழிலாளர்களாக வந்து குடியேறிய சுதேசக் குடிகளல்லாத மக்கள் இந்த வகைக்கு உதாரணம்.

(3) ஷெட்யூல் குடிமக்கள் சம்பந்தமான) 1950-ம் வருஷத்து அரசியல் உத்தரவில் ஷெட்யூல் ஜாதியினராகக் குறிப்பிடப்பட்ட ஜாதியினரில் சில பகுதியார். இவர்கள் சில குறிப்பிட்ட பிரதேசங்களுக்கு வெளியே வசிப்பவர்கள். இவர்கள் புராதன நிலைமையையும் பிற்போக்கான நிலைமையையும் விட்டு எந்த ஜனங்களுடன் வசிக்கிறார்களோ அவர்களுடன் ஒன்றுசேர்ந்துவிட்டிருக்கிறார்கள். இத்தகையவர்களை முக்கியமாக ராஜஸ்தானத்திலும், மத்யப் பிரதேசத்திலுமே காணலாம்.

(4) சில பிரதேசங்களில், முன்னால் பழங்குடி மக்கள் என்று கணக்கிடப்பட்டவர்கள் இப்பொழுது ஷெட்யூல் வகுப்பினராகக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள்.

(5) 'ஸி' பகுதி ராஜ்யங்களிலும் 'பி' பகுதி ராஜ்யமான ஜம்மு, காஷ்மீரிலும் 1941 ஜனசங்கியைக் கணக்கில் பழங்குடி மக்களாகக் கருதப்பட்ட ஜாதியினர். (2 ஷெட்யூல் குடிமக்கள் சம்பந்தமான) 1950-ம் வருஷத்து அரசியல் உத்தரவு இந்த ராஜ்யங்களுக்குப் பிரயோகப்படவில்லை. 1941 ஜனசங்கியைக் கணக்கில் இந்த ராஜ்யங்கள் சேர்ந்திருந்தாலும், இப்பொழுது இந்த ராஜ்யங்களில்உள்ள பழங்குடி மக்களின் ஜனத்தொகைகணக்கிடப்படவில்லை.

# சிவாஜி

ஆசிரியர் :— திருலோக-சீதாராம்

| கோட்டை | திருச்சி 31—12—50 | முற்றுகை |
| --- | --- | --- |
| 16 | விக்ருதி-ஞு மார்கழி-மீ 16-உ | 5 |

"சிவாஜி" சந்தா

ஆண்டு 1-க்கு ரூ. 7—0—0
6-மீ ரூ 3—8—0
தனிப்பிரதி அணு 2.

மானேஜர் : "சிவாஜி"
தபால்பெட்டி நெ. 332
தெப்பகுளம் P. O.
திருச்சிராப்பள்ளி.

சென்றவாரத் தொடர்ச்சி

## ஐரேப்பாவில் ஜி. டி. நாயுடு

பிரயாணக்காட்சிகள்

ரெபரன் கெஸ்டட்டீஸ் வாப் என்னும் சைவ உணவு விடுதியில்தான் பகல் உணவு. இங்கே ஒருநாள் மடைப்பள்ளியில் நுழைந்து தென்னாட்டுப்புகழ் உப்புமா தயாரித்தேன். விடுதியில் வந்திருந்த வேறு பலருக்கும் உப்புமா வழங்கப்பட்டது. அவர்களில் வில்லியம் ஸ்டுவால்ட் என்பவர் மற்றும் சில நண்பர்களுடன் உப்புமா தயாரிப்பு சம்பந்தமாக என்னைப்பேட்டிகண்டு வியப்புடன் விசாரித்தார். மறுநாள் எனது அன்றாட உணவு முறை பற்றியும் விவசாய ஆராய்ச்சிகளைப் பற்றியும் விரிவாக ஒரு அறிக்கை தயாரித்துக் கொண்டு வந்து என்னிடம் காட்டி அதைப்பிரசுரிக்க என் அனுமதியை விரும்பினார். நான் அவ்விடத்தை விட்டுப்புறப்பட்டுப்போகும் வரையில் அவ்வறிக்கையை வெளியிட வேண்டாமென்று தடுத்துவிட்டேன்.

விவசாய இலாகா மந்திரியின் காரியதரிசியை சந்திக்க நேர்ந்தது. ஹ்யூகோ லாங்க் என்னும் நிபுணரும் உடன் இருந்தார். விவசாய சம்பந்தமான ஆராய்ச்சிகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். இங்கும் மொழி விளங்காச் சங்கடம் தான். எப்படியோ பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. செப்டம்பர் 9-30 தேதிகளில் விவசாய இலாகா மந்திரியை நான் சந்திப்பதென்று ஏற்பாடாயிற்று.

ஸ்டட்கர்ட் நகரைவிட்டு நான் விடைபெறுவதற்கு நான்கைந்து நாட்களுக்கு முன்பு டாக்டர் ஹூகன் எபர்ட் என்பவருக்கு சில பயிர்விதைகளைக் கொடுத்திருந்தேன். ஃபெஃடோ ஓர்க்ஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர் இவர். நான் புறப்படுவதற்குள் இந்த விதைகள் ஊன்றப்பட்டு முளைவிட்டு மேலே வந்திருந்தன. மேற்கொண்டு அவற்றின் வளர்ச்சி எப்படி இருந்தது என்பதைத்தெரிந்து கொள்ள நேரம் இல்லை. இந்த நண்பர் மிகவும் அபூர்வமான மனிதர். தனது இல்லத்திற்கு என்னை வந்து விருந்துண்ணும்படி அன்புடன் அழைத்தார். சில காட்டுப்பழங்களை மணமும் சுவையும் குன்றாமல் அவரே தன் கையால் மிகவும் பக்குவமாகச் சமைத்துப் பரிமாறியதுடன், காய்கறிகளை அவற்றின் சுவையும் மணமும் கெடாமல் உணவு வகை தயாரிக்கும் சில முறைகளையும், அவற்றை மிகுந்த பயனுடைய வகையில் உபயோகிக்கும் விதத்தையும் விளக்கினார். பெரும்பாலும் இவ்வளவு கவனம் உணவு தயாரிப்பில் காட்டப்படுவதில்லை.

வர்த்தக சம்பந்தமான காரியங்களை முன்னிட்டு கஸ்டூ என்பவரை சந்தித்தேன். இவர் ஒரு ஸ்தாபனத்தின் நிர்வாகி. ஜெர்மன் வர்த்தக உலகில் கையாளப்படும் வழி துறைகள் பலவற்றை இவரிடம் அறிந்தேன். இவர் சில தொழிற்சாலைகளின் முகவரிகளும் அறிமுகச்சீட்டுகளும் எங்களுக்கு உதவினார். இவருடைய ஸ்தாபனம் பிரசித்தி பெற்ற ஒரு பாங்கு. இதன் கருவூலத்தைச் சேர்ந்த வில்ஹெம் பஸ்டூ அன்னியராகிய எங்களுக்குப்பெரிதும் துணை புரிந்தார். இவரை விட்டுப்பிரிந்து நானும் நண்பர் ஸ்மீட்மானும் வேற்றிடங்களிலுள்ள தொழிற்சாலைகளைப் பார்க்கும் பொருட்டாக விடைபெற்றுப்பிரிந்தோம்.

டஸ்லிங்கென் என்னுமிடத்தில் விவசாயக்கருவிகள் யந்திரங்கள் தயாரிக்கும் கூடத்திற்குச்சென்றோம். ரீல்லிங் என்பவரும் அவருடைய குமாரரும் இருந்தார்கள். சிறு சிறு நிலச்சுவான்கள் நிறைந்த நம்மை போன்ற நாட்டினர்க்கு மிகவும் பயன்படக்கூடிய பொருள்கள் இங்கே தயாராகின்றவை. தானியங்களைப்பொடிக்கும் யந்திரங்கள் குறிப்பிடத்தக்கவை. இவற்றைப்பயன்படுத்துவதனால் நாற்பது சதவிகித சேதத்தை தடுக்கலாமென்பதை ஆராய்ச்சி நிபுணர்கள் கூறுகிறார்கள். ஊருக்கு எடுத்துச்செல்வதற்காகச்சிற்சில கருவிகளை வாங்கினோம். இம்மாதிரி கருவிகளை இந்தியாவில் உபயோகிக்கவோ, உற்பத்தி செய்யவோ இயலுமா வென்று தெரியவில்லை. பொறுத்துத்தான் பார்க்கவேண்டும். ட்ரேயர் என்னும் இதன் இஞ்சினீயர் மிகவும் உற்சாகத்துடன் இவற்றின் உபயோகம் பற்றி விளக்கங்கள் கூறினார். இங்கிருந்து ஸ்வென்னிங்கென் என்னுமிடத்திற்கு நள்ளிரவில் வந்து சேர்ந்தோம். இங்கே நண்பர் ஸ்மிட்மான் அவர்களது தயாரும் உறவினர்களும் உள்ள இல்லத்தில் தங்கினோம்.

பின்னர், மொராட் பாக்டரியில் ஆஸ்கார் ஹெர்பர்ட்ஸ்ரோ என்பவர் அனுமதியுடன் அந்த தொழிற்சாலை யந்திரங்களில் வேலை செய்து பார்த்தேன். இங்கும் பயனுடைய பல யந்திரங்களைத்தேர்ந்தெடுத்தேன். பம்புகளும் யந்திர உபகரணங்களும் தயாராகும் ஒரு சாலையில் சில பொறுக்கி எடுத்தேன். வேறோரிடத்தில் கெடிகார யந்திரங்களைப் பெற்றுக்கொண்டேன். இப்படிப் பல தொழிற்சாலைகளைச் சுற்றிப் பார்ப்பதும் தேவையானவற்றை சேகரிப்பதுமே இடைவிடாத வேலையாக இருந்தது.

ஒரு தொற்சாலையில் நான் உருகிக்கொண்டிருந்த பிளாஸ்டிக் குழம்பில் கைவைத்துக் கட்டை விரல் தீய்ந்து விட்டது. உடனே உதவி கிடைத்து விட்டது. இந்த தொழிற்சாலை அதிபரான கிளெய்பர் என்பவரின் மகன் கடந்த போரின் போது ரஷ்ய சிறைக்கைதியாக அகப்பட்டுக்கொண்டவர். நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர் விடுவிக்கப்பட்டு தந்தையுடன் வந்து சேர்ந்தார். இந்த இளைஞர் கோயம்புத்தூருக்கு வந்து மோட்டார் வண்டிசம்பந்தமான எனது பயிற்சி வகுப்பில் சேர்ந்து படிக்க விரும்புவதாகத் தெரிவித்தார். ஜெர்மன் தேசத்திலிருந்து ஒரு மாணவர் கோவை வந்து பயிற்சிப் பெறுவதாக இருந்தால் அதைக் கௌரவமாகக்கருத வேண்டியதுதானே. கார்ட்ஸ்டோல் என்பவரும் கோவைக்கு வருகிறார்.

எடைக்கருவிகள் தயாராகும் சாலை ஒன்றில் புகுந்து பல விஷயங்கள் தெரிந்து கொண்டேன். சில கருவிகளையும் கையோடு கொண்டு செல்லவும் இங்கே வசதி செய்து கொடுத்தார்கள். இதேபோல் ஹோமல் அண்டு கெல்லர் பாக்டரியிலும் உதவிகள் கிடைத்தன.

பதினைந்து வருடங்களுக்கு முன்பு லட்வின் காக் என்பவருடன் நான் ஒரு தொழிற்சாலையில் வேலை செய்தேன். அவரைக்காண விரும்பிப்போனேன். இப்பொழுது அவர் அந்த தொழிற் கூடத்தைவிட்டு விலகித் தனியே சொந்தத்தில் ஒரு கூடம் ஆரம்பித்திருந்தார். யந்திர உபகரணங்கள் சுத்தில்கள் செய்து குவிக்கிறார்: ஒரே ஒரு சுத்திலாவது உடன் கொண்டுபோக வேண்டுமென்பது என் விருப்பம். நாணயச் செலாவணி கஷ்டங்களில் இது சாத்தியமாவென்பது தெரியவில்லை. இங்கே தூக்கமும்சோறுமின்றி இரவு வேலை செய்து நான் மிகவும் அயர்வடைந்தேன். நண்பர் அந்த நேரத்தில் தேநீரும் சிற்றுண்டியும் தயாரித்துக் கொடுத்தார். இங்கே அவர்கள் குடும்பம் பூராவும் ஆண் பெண் அடங்கலும் இருந்து உழைக்கிறார்கள். இவர்கள்

[8-ம் பக்கம் பார்க்க]




அறவலி காத்துநாளும் அன்னையின் பணிக்கென்றே—நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினேம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி 31-12-50

# புது வருடம்

ஏசுநாதர் பிறப்பையொட்டி நாளைக்குப் புதுவருடம். செந்நெல் வயல்களில் செல்வம் கொழிக்கும் உழவர்கள் தைப்பொங்கலன்று புத்தாண்டு பிறப்பதை எண்ணி ஆவலுடன் காத்திருப்பார்கள். பஞ்சாங்கப்படி, சித்திரையில், அறுபது வருடங்களின் வரிசையில் அடுத்துவரும் ஆண்டு பிறந்துவிடும்.

ஓரே வருடத்தில் இப்படி எத்தனை வருடப்பிறப்பு வந்தாலும் நமக்கு மகிழ்ச்சிதான். பழங்குப்பைகளை எரித்துவிட்டுப் புதிய வாழ்வு மலருவதற்கு ஏதாவது ஒரு வருடப்பிறப்பு உதவாதா என்பதுதான் காரணம்! ஆனல்......

புதுவருடத்தில் உலக சமாதானம் கனவாகிப்போர் மேகங்கள் கருத்து இடியிடித்து மழைபொழியுமோ வென்ற கவலைதான் ஏற்பட்டிருக்கிறது.

நமது குடியரசு மந்திரிசபையில் இந்த ஆண்டு இறுதியில் வல்லபபாய் படேல் இருந்த வல்லமை பொருந்திய பதவிப்பொறுப்பு இரு கூறுகிப் புது வருடத்தில் இருபெரும் திறமைசாலிகள் வசமாகப் பகிர்ந்தளிக்கப்பெற்றிருக்கிறது. இவர்கள் இருவரும் தங்கள் திறமையெல்லாம் காட்டிச் சீராக நிர்வாகம் புரியவே முயற்சிப்பார்கள். படேல் மறைந்த செய்தி கேட்டதும் சிக்கந்தராபாத் நகரில் சில கான்ஸ்டேபிள்கள் பாகிஸ்தான் கொடியைப் பறக்கவிட்டார்களாம். எவ்வளவு மண்டலீகர்களின் முணுமுணுப்பும் மனப்புகைச்சலும் சர்தார் படேலின் செங்கோலுக்கு வணங்கியிருக்கக்கூடுமென்பதை யூகித்துத்தான் பார்க்கவேண்டும். சாட்சாத் பத்மனுபஸ்வாமியே நேரில் முடிசூட்டிய திருவிதாங்கூர் பட்டத்தை, பாரதத்துக் குடியரசுப் பெருமைக்கு முன் தலை தாழ்த்த விடமாட்டேன் என்று சி. பி. இராமஸ்வாமி அய்யர் கூறிக்கொண்டிருந்தது மறந்துவிடவில்லை. பட்டேலின் செங்கோலுக்கு முன், செயல் திறனுக்குப் பேர்போன சி. பி. யின் சங்கீதம் செல்லாமல் போய்விட்டது. ஒளியிழந்த தாரகையாகி விட்டார் அவர். முடிசூடிய மன்னர்களையெல்லாம் முடிசூடாத நம்மைப்போன்ற குடியரசர்களின் (வாக்காளர்களின்) பட்டியலில் சேர்க்கப் பட்டேல் தவிர வேறொருவரால் முடிந்திருக்குமாவென்று இப்போது ஆராய்ந்தால் சரியான விடை கிடைக்காது.

எப்படியும், உள்நாட்டு நிர்வாகம், சமஸ்தான விவகாரம் இனி மிகப்பெரும் தொல்லைகள் தந்துவிட முடியாது. நிர்வாக யந்திரத்தை சீராக இயக்கினல் இனிமையாகவே நடத்தக்கூடியவைதான். இதை மனதில் வைத்து மந்திரிசபை இலாக்காக்களில் மாற்றங்கள் புரிந்திருக்கிறார்கள். ஆயினும்......

இயற்கையை நமது இச்சைக்குட்படுத்தி வேண்டியபோது வானமழை தருவிக்கவும் வளமார்ந்த பயிர்ச்செலவுக்கு வழி செய்யவும் அரசாங்கச்சட்டம் பயன்படாது. ஆயினும் பஞ்சம் போக்க வழிகாண்பதில் பதவிப்பொறுப்பைப் பயன்படுத்த முடியும்.

முன்ஷியின் மேலாவில் இலக்கிய நகைச்சுவை பொருந்திய நடவடிக்கைகளே மிகுந்திருக்கின்றன. ரோச விக்டோரியாவின் மாகாணத்தில் தப்புக்கணக்குப்போடும் தான் தோன்றிகள் கூட்டம்தான் நிர்வாகத்தில் மிகுந்திருக்கிறது. நாளைமுதல் சில மாவட்டங்களில் கொள்முதலை நிறுத்தி விடப்போகிறார்கள். விளைவு குறைவான இடங்களில் மட்டும் கொள்முதலை நிறுத்திவிட்டு, அதிக உற்பத்தியாகும் மாவட்டங்களில் இருந்து நெல் பிடித்துக் கொண்டு வந்து போட்டு நியாயவிலைக்கிடங்குகளைப் பற்றாக்குறையுள்ள இடங்களில் வைக்கலாமென்பது திட்டம். எந்தத்திட்டமாயிருப்பினும் நிர்வாக ஊழல் போக்கினலன்றி ரேஷன் இல்லாத கிராமங்களில் பட்டினிதான் கைகண்ட பலனாயிருக்கும்.

ஃ ஃ ஃ ஃ ஃ

புதுவருடத்தில் பத்திரிகைகள் சம்பந்தமாக நியூஸ் பிரிண்ட் காகிதக் கட்டுப்பாடு அமுலுக்கு வந்திருக்கிறது. இரண்டணுவுக்கு இருநூறு பக்கங்கள் கைநிறையப் பிரித்துப்படிக்க தமிழ் வாசகருக்கு வசதியில்லை. குப்பைகளை அதிகம் சேர்க்காமல் மணிக்கருத்துக்கள் மட்டும் பெற்றுப்பயனடையலாம். உலகம் பூராவிலும் வளர்ந்துள்ள தேவையை சமாளிக்கக்கூடிய அளவில் பத்திரிகைக் காகிதம் உற்பத்தியாகவில்லை. உற்பத்தியே இல்லையென்று சொல்லிவிடக்கூடிய நம் நாட்டில் பத்திரிகைக்காரர்களே மனமுவந்து தங்களுக்குத் தாங்களே இப்படி ஒரு கட்டுப்பாட்டை விதித்துக் கொண்டார்கள். தன்னடக்கத்தைவிட தட்டி அடக்கப்படுவதே சாலச்சிறந்ததென்றோ என்னவோ, கருதித்தான் சர்க்கார் சட்டத்தின்படியே அதை உறுதிப்படுத்தியிருக்கிறார்கள். லாபநஷ்டம் போகப்போகத்தான் தெரியவேண்டும்.

புதுவருடம் புதுமையும் பொலிவும் தரட்டுமென்று விரும்புவோம்.

---

# புராணப் பூட்டு

"மந்தஹாஸன்"

வண்டி வருவதற்கு நேரமிருந்தது. மாயவரம் புகையிரத நிலையத்து நான்காவது தாழ்வாரத்தில் காத்திருந்தோம். மாதுளைச் சிவப்பு நிறத்துடன் கூடிய பம்பிளிமாஸ் பழத்தைத் தோலைமட்டும் உரித்துவிட்டு தட்டுக்காரன் கொலுவைத்திருந்தான். ஒன்றுவாங்கி நண்பர்களுடன் பங்கிட்டுக் கொண்டேன். புளிப்பு துவர்ப்பு இனிப்பு கசப்புஆகிய இவைகளின் கலவை அந்தப் பழச்சுளைகள். அடிநா கசந்தது. வண்டி இன்னம் வரவில்லை. தாழ்வாரத்தின் கோடியில் சுதேசமித்திரன் புத்தகப் பெட்டிக்கடை. கண்ணில்பட்டது. ஏதாவது வாங்கலாமென்று தோன்றிற்று.

"இராவணத்தத்துவம்" நூலின் பெயர் கவர்ச்சிகரமாக இருந்தது. ஏதோ புதை பொருளை விளக்கி விடுவதாகக் கூறி அழைத்தது. ஆறணு விலைகொடுத்து வாங்கினேன். நவீன பகுத்தறிவு வாதி யாராவது எழுதியிருக்கக்கூடும் என்று நினைத்தேன். என்ன சொல்லியிருக்கப் போகிறார்கள்? ராவணன் திராவிடன் தான் என்பதை வரிந்து விளக்கும் முயற்சியாக இருக்கலாம். என்னதான் சொல்லியிருக்கிறது பார்க்கலாமே யென்ற ஒரு சபலம். நான் எதிர்பார்த்தது போல் இல்லை. திருப்பராய்த்துறை ராமகிருஷ்ண தபோவனத்தின் தலைவரான சித்பவானந்த அடிகள் இயற்றியது. படித்துப் பார்க்க பதினைந்துநிமிஷங்கள்போதுமானதாக இருந்தது.

புராணப்புரட்டு என்று கூறிவிட்டு பிறகு புராணபாத்திரமான இராவணன், நரகாசுரன், இரணியகசிபு இவர்களையெல்லாம் திராவிடன் என்று சரித்திர ஒட்டுப் போட்டுப் பார்க்கும் நவீன பகுத்தறிவு வாதம் வேடிக்கையானதுதான். நம்பாத கதையில் குறிப்பிட்ட சிலபாத்திரங்களைமட்டும் ஒப்புக்கொள்ளும் அடிப்படையில், உண்மையறியும் ஆவல் நிச்சயம் கிடையாது. எடுத்துக் கொண்ட வேறு ஏதோ விவகாரத்துக்கு கிடைத்ததைப் பயன்படுத்துவதில் முரண் ஏற்படுவதைக் கூட மதிக்காத கல்லுளி மங்கத்தனம்தான் இருக்கிறது.

இல்லையானல் சூர்ப்பநகா தேவி, தாடகைப்பிராட்டியார் இப்படி திருப்பிப்போட்டு இராவண காவியம் எழுதமுடிந்திருக்குமா? இப்படியெல்லாம் எண்ணங்கள் எழுந்தன. "இராவண தத்துவம்" ஆசிரியரான அடிகளார் என்ன கருதுகிறார் என்று பார்த்தேன். இராவணன் பிராமணன் தான் என்பதை பூணூல் போட்டு விளக்கியிருக்கிறார். நூலின் போக்குக்கு இந்த விளக்கம் வேண்டாத பகுதி.

ராமாயணம் மனித வாழ்வாக அமைந்திருக்கும் தத்துவத்தை வைத்து "இராவணன்" மட்டும் எந்த அம்சமாக உருவகப்படுத்தப்பட்டிருக்கிறான் என்பதை விளக்குகிறது நூல். நமக்குள் இருக்கும் தீய பண்புகளே என்று கூறி கதைக்கு ஏற்ற கொடிய உருவத்தை இராவணனுக்குக் கொடுத்துவிட வில்லை. இராவணன் நமது நேரான பிரதிநிதியாக இருக்கிறான். நாம் பெறத்தகுந்த இகலோக பராக்கிரமங்கள் அனைத்தின் பரிபூர்ண வெற்றி இராவணன் என்பது விளக்கம். காமம் என்ற ஒரு தீமையே மானிட வாழ்வின் பராக்கிரமங்களைச் சிதறடிக்கிறது என்பது குறிப்பு.

ஃ ஃ ஃ

புராணங்களுக்குப்போதாத காலம் இது. புதிதாக விளக்கம் சொன்னலல்லாமல் அவற்றை நிறுத்திவைக்க முடியாது என்ற கருத்துடைய பாஷ்ய கர்த்தாக்கள் சிலர் இருக்கிறார்கள். அதாவது புராணத்தை மற்றவர்கள் நம்ப மறுக்கிறபடியால், அவர்கள் நம்பும்படியான விளக்கத்தை சிருஷ்டித்து புராணக்கதைகளை அழியாமல் காக்கவேண்டுமென்ற சிரத்தை காரணம் விளக்கங்கள் என்று வந்துவிட்டால் விவகாரம் முளைக்கத் தான்செய்யும்.

"இராவணதத்துவம்" போன்ற விளக்கங்களுக்கும் "இராவண காவியம்" போன்ற புதிய கற்பனைகளுக்கும் அதிகபேதமில்லை என்று இலக்கியநண்பரான "மயன்" அபிப்ராயப்படுகிறார். இரண்டு பேரும், இராமாயணக் கதையைக் கற்பனை செய்தவனுக்கு அநீதி இழைக்கிறார்கள் என்பது அவர்கட்சி.

ஒன்றுநடந்து தான் இருக்க வேண்டுமென்றோ, நடந்திருக்க முடியாது என்றோ வாதிஆரம்பித்தால் அதன் வட்டத்திற்குள் வரத்தக்கவை கால தூரக்கணக்கு அகப்படக்கூடிய ஸ்தூலமான சம்பவங்களாகத்தான் இருக்க முடியும். ஆள், ஊர், பேர், அடையாளம் தேடி இவையெல்லாம் கலை சிருஷ்டியை மாசுபடுத்தக் கூடாது. ராமாயணம் ஒருஅற்புதமான காவிய மாளிகை அதன் பாத்திரங்கள் தங்கள் தங்கள் வடிவில் பரிபூர்ணமான கலாசோபையைப் பெற்றுத் திகழ்வன. அதனை சத்திர சிகிச்சை செய்வது கலைக்குத்துரோகம் இழைப்பதாகும் என்று அவர் கூறுகிறார். சமுதாய சரித்திர கலாசார இனவாரி சண்டைகளைப் போட விரும்புகிறவர்களோ, தற்காத்துக்கொள்ள விரும்புகிறவர்களோ, கலை உருவங்களின் கிட்டவராமல் ஒதுக்குப்புறமாகநின்று சண்டையிட்டு மண்டை யுடைத்துக் கொள்ளட்டுமே என்ற கருத்துப் போலும்.

கலைகுறிப்பிட்ட கருத்தைப் பிரசாரம் செய்கிறது என்று ஆராய்ந்து முடிவுகட்ட ஆரம்பிக்கும் போது

[8-ம் பக்கம் பார்க்க]

செய்தி விளக்கம் — டெல்லித் தபால்

# கோட்டை வாசல்

'கொத்தவால்'

## பார்லிமெண்ட் விஜயம் !

"பாராளும் மன்றம்" என்று தனித் தமிழ் அன்பர்களால் அழைக்கப்படும் நம்நாட்டு பார்லிமெண்ட் சபைக்கு சமீபத்தில்தான் சென்று வரும் பேறு எனக்குக் கிடைத்தது. 'கொத்தவால்' பதவியை நான் எட்டு வருஷங்களாக வகித்து வந்தும் அந்த வாதப் பிரதிவாத மன்றத்தை என்னால் பார்க்க முடியவில்லை. இதற்குக் காரணம்? அது எனக்கே தெரியவில்லை ?

பிரிட்டிஷார் ஆண்ட காலத்தில் மத்ய சட்டசபை நடவடிக்கைகள் எல்லாம் வெகு ரஸமாக இருப்பதுவழக்கம். திரு. ஸத்தியமூர்த்தி, புலாபாய் தேசாய் போன்ற வாக்குச் சாதுர்ய மன்னர்களின் காரசாரமான சொற்பொழிவுகள் படிக்கப் படிக்க சுவாரசியம் மிகுந்து காணப்படும். அதன் சட்டங்கள் மக்கள் மனதிற்குப்பிடிக்காது. அதிகார வர்க்கத்தின் சின்னமாக அது விளங்கியது. ஜனப் பிரதிநிதிகள் சிலர் ரசமாகப் பேசியபோதிலும் சட்டசபையை மக்கள் உகப்பாக கருதியதில்லை.

நாடு சுதந்திரம் பெற்றது. மத்ய சட்டசபை பார்லிமெண்டாக மாறி மகிமை பெற்றது. ஒருகாலத்தில் எதிர்க்கட்சியாக இருந்தவர்களும் சர்க்கார் கட்சியாக மாறினார்கள். ஆனால் முன்பு கர்ஜனை புரிந்த சிங்கங்கள் மறைந்துவிட்டன! ஆணித்தரமாக அறைந்து பேசக்கூடியவர்கள் தற்போதைய பார்லிமெண்டில் இல்லை என்றே சொல்ல வேண்டும். ஜனங்களுக்கு சுதந்திர ஆவேசத்தை மூட்டிய அரும் பெரும் தலைவர்கள் ஆட்சிலகானைப் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய சகபாடிகளே பெரும்பான்மை அங்கத்தினர்கள் மசோதாக்களையும், பிரேரணைகளையும் அலசி ஆராய்கிறார்கள். திருத்தங்கள் கூறுகிறார்கள். சில திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சில தள்ளுபடியாகின்றன. எல்லாம் ஜனநாயகப் பந்தாவில் நடக்கின்றன. சந்தேஹமில்லை. ஆனால் வெளித்தோற்றத்துக்கு எப்படியிருக்கிறது? ஏதோ ஒப்புக்கு நடப்பதுபோல்தான் தோன்றுகிறது. ஏனெனில் வகையான எதிர்க்கட்சியில்லை. காங்கிரஸ் அங்கத்தினர்கள் சர்க்காரை எதிர்த்து வோட் செய்யமுடியாது. கட்சிக் கட்டுப்பாட்டுக்குப் புறம்பான செயல் அது! தேர்தல் அடுத்த வருஷம் வரப்போகிறது. அப்போது எதிர்க்கட்சி ஒன்று உருவாகலாம். பிறகுதான் பார்லிமெண்ட் நடவடிக்கைகள் சுவையாக இருக்கும்.

நண்பர் ஒருவர் மூலம் பாஸ் வாங்கிக்கொண்டு பல பரிசோதகர்களைக் கடந்து பார்லிமெண்ட் சபையில் "பார்க்க வருவோர் பகுதி"யில் போய் அமர்ந்தேன். அரண்மனை போன்ற கட்டிடம். விசாலமான "ஆளோடி" முட்டை வடிவமான ஆசனங்கள் அமைக்கப்பட்டிருந்தன. இருமருங்கும் சேரும் விளிம்பில் நடுநாயகமாக, சிம்மாசனத்தில் வீற்றிருப்பதுபோல் சபாநாயகர் வீற்றிருந்தார். அவரது வலது கைப்புறத்தில் முன் ஆசனங்களில் மந்திரிமார்கள். இடது கைப்புறத்தில் அங்கத்தினர்கள். மந்திரிகளுக்குப் பின்னாலும் அங்கத்தினர்கள் அமருகிறார்கள் சபாநாயகர் தமது இடத்திலிருந்து எல்லா அங்கத்தினர்களையும் பார்க்கமுடியும். ஆனால் உயரே சுற்றி அமர்ந்திருக்கும் "பார்க்க வருவோர்"தான் எல்லா அங்கத்தினர்களையும் பார்க்க முடிவதில்லை. முக்கியமான நாட்களில் இட நெருக்கடி ஏற்படும் போலிருக்கிறது. தேர்தல் நடைபெற்று முன்னூற்றுச் சொச்சம் பிரதிநிதிகளும் சபைக் கூட்டத்துக்கு வருவதாக இருந்தால் நெருக்கி அடித்துக்கொண்தான் உட்காரவேண்டும்! பிரிட்டிஷார், 'நாம் இந்தியாவை விட்டுப்போகப் போகிறோம், ஒருகாலத்தில் முப்பத்தி ஐந்துகோடி மக்களின் பிரதிநிதிகள் இங்கு அமருவார்களே' என்று நினைந்திருந்தால் ஒருவேளை கொஞ்சம் பெரிய மண்டபமாகக் கட்டியிருப்பார்களோ என்னவோ?

அன்று பார்லிமெண்ட் நடவடிக்கைகளைப் பார்த்தபோது, பத்திரிகைகளுக்கு மக்கள் ரொம்பவும் கடமைப்பட்டிருக்க வேண்டுமென்றுதான் நான் நினைத்தேன். "அவர் அப்படி விளாசினார்", "இவர் இப்படி கர்ஜித்தார்" 'இன்னார் இன்னாருக்கு ஆப்பு அறைந்தார்" என்றெல்லாம் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்து பார்லிமெண்ட் நடவடிக்கைகளையும், தலைவர்களையும், பிரதிநிதிகளையும் பற்றி மக்கள் மனதில் பிரமிப்பையும் வியப்பையும் ஊட்டும் அரும்பணியை பத்திரிகைகள் செய்து வருகின்றன. பேப்பரில் படிக்கும்போது எல்லாம் பிரமாதமாக இருக்கிறது. திக்கித்திக்கியும், தடுக்கி விழுந்தும், ஆயிரத்து எட்டு 'ஸார்களும்' 'ஆனரபிள் மெம்பர்களும்' போட்டுக் கொண்டு நிகழ்த்தப்படும் சண்ட பிரசங்கங்களையெல்லாம் அழகான பாஷையில் ரசமான கோவையாகப் பத்திரிகைகள் தரும்போது நாம் அவற்றுக்கு என்ன கைம்மாறு செய்வதென்றே புரியவில்லை.

முதியோர் பள்ளிக்கூடம் போலவே பார்லிமெண்ட் தோற்றமளித்தது. உப்புசப்பில்லாத விவாதமாக இருந்தது. மொத்தத்தில் ஜீவனே இல்லாத சபையாகத்தான் அன்று விளங்கியது. மறுநாள் பேப்பரில் பார்த்தபோது வழக்கம்போல் பிரமாதமாகத்தான் பட்டது! பத்திரிகைகளுடைய சக்தியே சக்தி.' என்று வியக்காமல் எப்படியிருக்க முடியும்?

★

## ஜெமினி மங்களா !

தமிழ்நாட்டு கர்ணபரம்பரைக் கதைச்சித்திரம் இப்போது அகில பாரத பாஷையில் வெளி வந்திருக்கிறது. 'சந்திரலேகா' 'நிஷான்' படங்களின் மூலம் வடநாட்டில் வெற்றிக்கொடி நாட்டிய ஜெமினியார் இப்போது "மங்கம்மா" மூலம் மற்றுமொரு விஜயக்கொடி நாட்டியிருக்கிறார்கள் நிஷானில் அற்புதமாக நடித்த பானுமதி இதில் இன்னும் அபூர்வமாக நடித்துப்பெயரை பிரபலப்படுத்திக்கொண்டிருக்கிறார். மங்கமா சபதத்தில் நடித்த மங்கம்மா வசுந்தராவின் நடிப்பைவிட மங்களா பானுமதியின் நடிப்பு மேல் என்றுதான் சொல்லவேண்டும். மிடுக்கான நடையும் துடிப்பான பேச்சும், மின்னல் மாதிரி பளிச்சென்று மாறுபடும் முகபாவங்களும் பானுமதியின் நடிப்புக்கு உயர் சிறப்பாக அமைந்திருக்கின்றன. "ஃப்ரீ ஆக்டிங்" என்று சொல்லப்படும் சங்கோஜமற்ற நடிப்புக்கு பானுமதி உதாரணமாக விளங்குகிறார்.

கதாநாயகியையே பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தால் போதுமா? ரஞ்சன் தமிழ் படத்தில் சோபிக்கவில்லை. இதில் நன்றாக சோபிக்கிறார். சூரியப்பிரபாவுக்கு இதில் திறமையைக் காட்ட சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த சந்தர்ப்பத்தை அவர் நன்கு பயன்படுத்திக் கொண்டுமிருக்கிறார். வடநாட்டு நடிகர்களான ஆகா, டேவிட், பத்ரிபிரசாத் முதலானோர் தமது பாகங்களை உரியபடி நடித்திருக்கிறார்கள்.

ஜெமினியாருக்கே உரித்தான சிறப்பெல்லாம் படம் கொண்டிருந்தாலும் இரண்டு குறைகள் படத்தை முந்தய படங்களின் தரத்தை எட்டமுடியாமல் செய்து விட்டன! ஒன்று படத்தின் நீளம் பதினைந்தாயிரத்துச் சொச்சம் அடி இருப்பதும், பழைய மங்கம்மா சபதத்திலுள்ள ஆபாஸக்காட்சிகள் இதிலும் இடம் பெற்றிருப்பதுமேயாகும்! சந்திரலேகா, நிஷான் இரண்டிலுமுள்ள "வேகம்" இதில் இல்லை. சில ரயில் வண்டிகள் சில பகுதியில் போட்மெயில் போல ஓரிடத்திலும் நிற்காமலும் சில பகுதியில் பாஸஞ்சர் வண்டிபோல நின்று நின்றும் போவதுபோல இருக்கிறது படத்தின் ஓட்டம். சில பாட்டுக்களையும், பெண்கள் பச்சைக் குதிரை தாண்டுவதையும், 'டி' கொடுப்பதையும், மாம்பழம் கேட்பதற்கு பதிலாக முத்தம் கேட்பதையும் வெட்டி எறிந்து வேறு வகையில் பக்குவமாக கதையை ஜோடித்திருந்தால் படம் குறையற்றதாக விளங்கியிருக்கும்! வடநாட்டில் எவ்வளவோ மட்டமான ஹாஸ்ய, ஆபாஸப்படங்கள் வெளிவருகின்றன. அவற்றைக்காட்டிலும் 'மங்களா' மேலான படம்தான். அதற்காக வடநாட்டுத்தரத்தை நாம் பின்பற்றவேண்டிய அவசியமில்லையல்லவா ?.

———

# இதுவா தர்மம்?

"சூராஜ்"

உடலெல்லாம் புண். கைகள் தெளியும்போது எல்லையற்ற கோரம்! கண்கள் தானோ? முகத்துப்புண்களா? அறியாதபடி முகமெல்லாம் ரணம். அது ஒரு குழந்தை—நமக்கு அப்படி நினைக்க மனமில்லாவிட்டாலும் அதைக் கையிலேந்தி வரும் அவளுக்கு அது குழந்தைதான்!

அவள் பிச்சையே தொழிலாகக் கொண்டவள். அந்தத்தொழிலின் முதல் 'குழந்தை'தான். அவளைப் பார்க்கும்போது தோன்றும் அருவருப்பு—சாதாரணமாகப் பிச்சைக்காரர்களைப் பார்க்கும்போது ஏற்படுவது—அவள் குழந்தையைப்பார்த்ததும் இன்னும் அதிகமாயிற்று.

பிச்சைபோட மனமுள்ளவர்கள்கூட அவளை நெருங்க அஞ்சினர்கள். எது அவளுக்கு வருமானம் தேடித்தருமென்று எண்ணினளோ அது அவளுக்கு அதற்கே தடையாய் நின்றது.

ஃ ஃ ஃ

பக்கத்து வீட்டுக்காரர் பத்மனுபய்யர் பரம்பரைப்பணக்காரர். மாதம் இரண்டு சமாராதனைகள் வீட்டில். இரண்டு நாள் உற்சவ கைங்கர்யம் கோயிலில். இவை அவருக்கு 'தர்மிஷ்டர்' என்ற பெயரை வாங்கிக்கொடுத்தன. நகர்ந்து கொண்டிருந்த அந்த பிச்சைக்கார இயந்திரம் தர்மப்பிரபு என்று குரல் கொடுத்துக்கொண்டே அவர் வீட்டிற்குள் நுழைந்தது.

எங்கள் ஊர் தர்மத்தின் மனித வடிவம் திண்ணையில் அமர்ந்திருந்தது. அந்தப் பிச்சைக்காரியைக் கண்டதும், புருவங்களில் ஒருசுளிப்பு. மருந்து விழுங்குவதுபோன்ற ஒரு தோற்றம்.

"அப்பால போ......புள்ளே" அவள் உடல் நடுங்கியது. குழந்தையைத் தரையில் வைத்து, ஆடையைச் சீர்செய்து கொள்ளக் குனிந்தாள். தர்மிஷ்டர் கோபம் எல்லையைக்கடந்து விட்டது. "சீ...சீ...சீ எடு...எடு... குழந்தையை...ஓடு..."

"சாமி...எதினாச்சும்..." என்று இழுத்தாள் அவள்.

"போறயா இல்லியா"? வெள்ளிப் பூண்போட்ட தர்மிஷ்டரின் கைத்தடி ஓங்கியது. ஏதோ முணுமுணுத்துக்கொண்டு பிச்சைக்கார இயந்திரம் நகர்ந்தது.

★

அவள் வந்துபோய்ப் பத்து மாதங்கள் இருக்கும். அன்று பத்மனுபய்யர் வீட்டில்சமாராதனை. நான் உள்பட எல்லோரும் போயிருந்தோம். வயிறு நிறைந்ததும் திண்ணைப்பேச்சு ஆரம்பமாகியது.

ஒருவர் ஆரம்பித்தார் "பணக்காராளா இருந்துடறது பெரிசில்லை ஸார். நம்ப ஐயர்வாள் மாதிரி தாராளமனம் இருக்கணுமே." அதை அத்தனை தலைகளும் அசைத்து ஆமோதித்தன.

அவர்கூறிய 'தாராளமனம்'—அந்தச்சொல் என்காதுகளில்ரீங்காரம் செய்தது. அந்தப் பெண்—அவள் கைக்குழந்தை— இருவரும் என்மனக்கண்முன்தோன்றினர்கள். "இருக்கறவங்களுக்குக் கொடுத்தா உங்களைப்பத்து பேர்முன்னடிஎத்திப்பேசுவாங்க ஆனல் இல்லாதவங்களான எங்களுக்குக்கொடுத்தா எங்கமனசுதான் நிறையுமே தவிர உங்களுக்கு என்ன ஆகும்?" என்று கேட்பதுபோல் ஒருபிரமை ஏற்பட்டது எனக்கு. என் சிந்தனை கலைந்தபோது "தர்மிஷ்டர்னு அவாளுக்குத்தான் தகும்" என்று முடித்துக் கொண்டிருந்தார் மூன்றுவேளைசாப்பாட்டை ஒரே வேளையில் சாப்பிட்டிருந்த ஒருவர். அவர் முத்தாய்ப்பு வைத்து முடித்த தர்மிஷ்டர் என்றசொல்லைக்கேட்டு என்உள்ளம் சிரித்தது.

"இதுவாதர்மம்...?" என்று கேட்டு அந்தப்பழைய தாயும் அவள் சேயும் என்உள்ளே சிரித்தனர்.

---

## சர்தார் பட்டேல் வாழ்க்கைப் படம்

இந்திய சர்க்கார் திரைப்படத்தயாரிப்புப்பகுதியினர் டிசம்பர் 16-உயன்று சர்தார் பட்டேலின் இறுதி யாத்திரை பற்றிய நிகழ்ச்சிச் சித்திரத்தை வெளியிட்டதைத்தொடர்ந்து இப்போது அவரது வாழ்க்கை வரலாற்றை சவிஸ்தாரமாக எடுத்துக்காட்டும் துண்டுப்படத்தை இவ்வாரச்செய்திக்கதிரின் விசேஷ வெளியீடாகத் திரைக்குக்கொண்டு வந்தனர்.

தேச வளர்ச்சிக்கு ரட்சகராக இருந்த சர்தார் வல்லபாய் பட்டேல் நாட்டின் நன்மைக்காக. தூது பேசுபவர் என்ற ஹோதாவிலும், முன்னணி அரசியல் தலைவர் என்ற ஹோதாவிலும் அரசாங்க நிர்வாகி என்ற ஹோதாவிலும் செய்துள்ள அரிய சேவைகள் இதில் சிறப்பாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன; அவரது சாதனைகளின் சிகர அம்சமான சமஸ்தான இணைப்பு முயற்சி இதில் இடம் பெறுகிறது என்று சொல்லவே தேவையில்லை.

---

## தூத்துக்குடியிலிருந்து கொழும்புசெல்லும் பிரயாணிகளுக்கு காலராத் தடை ஊசி

கொழும்பு சுகாதார அதிகாரிகள் தூத்துக்குடியைக் காலரா பரவியிருக்கும் பிரதேசமாக அறிவித்திருப்பதாக இந்திய சுகாதார சர்விசுகளின் டைரெக்டர் ஜெனரலுக்குத் தகவல் வந்திருக்கிறது.

பிரயாணிகள் கொழும்பில் இறங்கும்பொழுது காலதாமதமும். இடஞ்சலும் ஏற்படாமலிருக்கும்பொருட்டு, இந்தியாவிலிருந்து கொழும்பிற்குச் செல்லும் பிரயாணிகள் காலராத் தடை ஊசி போட்டுக்கொண்டதற்கு அத்தாட்சியாக சர்வதேச நமூனைப்படிக்குள்ள சர்டிபிகேட் வைத்துக்கொள்ள வேண்டுமென்று கோரப்படுகிறார்கள்; இந்த சர்டிபிகேட்டுகள் சர்க்கார் வேலையிலோ அல்லது முனிஸிபல் வேலையிலோ இருக்கும் டாக்டர்களால் கையெழுத்தோ மேல் ஒப்பமோ இடப்பட்டிருக்க வேண்டும்; முதலாவது இரண்டாவது இன்னொகுலேஷன்கள் (ஊசி போடுவது). கொழும்பில் இறங்குவதற்கு குறைந்த பட்சம் எழு நாட்களுக்கு முன்பும் அதிகபட்சம் ஆறுமாதத்திற்குள்ளும் செய்யப்பட்டிருப்பதாக அதில் கூறப்பட்டு இருக்கவேண்டும். முதல் இன்னொகுலேஷனுக்கும் இரண்டாவது இன்னொகுலேஷனுக்கும் இடையில் உள்ள காலம் எழுநாள் முதல் பத்துநாள் வரையில் இருக்கவேண்டும்.

---

## ஐந்து குழந்தைகள்

பதினைந்து வருட காலத்திற்கு முன் கானடாவில் ஒருவளுக்கு ஒரே ஒரு முறையில் ஐந்து குழந்தைகள் பிறந்தன. இதைக் கேட்டு உலகமே ஆச்சரியம் அடைந்தது. இந்த சிறு குழந்தைகளை உயிருடன் காப்பாற்ற வேண்டும் என்று பத்திரிகைகளும் டாக்டர்களும் அரும்பாடு பட்டனர். மனிதர்களுக்கு இம்மாதிரியான நூறு குழந்தைகள் பிறப்பது அசாதாரணமான விஷயமே.

அநேக விலங்குகளுக்குஅநேக குட்டிகள் பிறப்பது சர்வ சகஜமேயாகும். மீன்களுக்கு 10 முதல் 10,000 முட்டைகள் வரை போடுவது சகஜம். அசரை மீன்களுக்கு 30,000 முட்டைகளை இடுவது சர்வ சகஜமாகும். கெண்டை மீன்கள் சாதாரணமாக 200,000 முட்டைகளை இடும். ஆனல் விலங்குகள் எல்லாம் இவ்வளவு குட்டிகளைப் போடுவதில்லை.

நாகப் பாம்பு 15 முதல் 20 முட்டைகள் இடுகின்றது. கட்டுவிரியன் 5 முதல் 16 வரை, பச்சோந்தி 27 முதல் 37 வரை, முதலை 25 முதல் 60 வரை வட அமெரிக்காவைச் சேர்ந்த ஷீத் மீன் ஒரே சமயத்தில் 500 முட்டைகளை இட்டு வருகிறது பொதுவாக இவைகளைக் காட்டிலும் அதிகமாக முட்டை இடுவதில்லை. ஆனல் அவைகளின் சந்ததி அதிக சீக்கிரமாக உற்பத்தி ஆகுகிறது. கொசு ஒன்று ஒரே சமயத்தில் 120 முதல் 150 முட்டைகள் வரை இடுகிறது. அது 30 நாட்களுக்குள் 16,000 ஆக உற்பத்தியாகி முக்கால் மிலியன் ஆட்களுக்கு உபத்திரவம் அளிக்கின்றது. ஒரு கொசுவின் ஐந்தாவது தலை முறை 40 லக்ஷங்களாக உற்பத்தியாகிறது. இவைகளின் பிரமாத உற்பத்தி சக்தி அந்த கொசு அபாயகரமானதாக இல்லாவிட்டால் கவலையில்லை.

அனொபிலிஸ் என்ற கொசு உதாரணமாக மலேரியா வியாதியை எடுத்துச் செல்வதாகும். லீக் ஆப் நேஷன்ஸின் மலேரியா கமிட்டியின் நிபுணர்கள் அதிக ஆராய்ச்சிக்கு பிறகு ஒரு சிகித்ஸையை கண்டுபிடித்துள்ளனர். இந்தக் கமிட்டியார் 1938ல் வெளியிட்ட அறிக்கையில் மலேரியா காலத்தில் 400 மிலிகிராம் கொய்னவை தினசரி எடுத்துக் கொள்ளும் படியும் ஜுரம் வந்த சமயத்தில் தினசரி ஒன்று முதல் மூன்று கிராம்கள் வரை உட்கொள்ளலாம் என்றும்கூறி வருகின்றனர்.

TAMIL 433

## ஜனகணிதி விசேஷ தகவல்கள்

[2ம் பக்கத் தொடர்ச்சி]

வேண்டுமென்றே ஜனத்தொகைக்கணக் கெடுப்பைப் பெருக்கிக்காட்ட முயலுவதைத் தடுப்பதற்கு விசேஷ தடை ஏற்பாடுகளும் முன்னெச்சரிக்கைகளும் மேற்கொள்ளப்படும். தகவல் அறிவிப்புக்களைப் பொய்மைப்படுத்துவதற்கு எத்தனிப்பவர்களுக்குச் சென்சஸ் சட்டத்தில் சரியானபடி தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது; எந்த இடத்திலாவது நேர்மையற்ற முறைகள் கையாளப்படக்கூடும் என்று சந்தேகிப்பதற்கு ஏதுவிருக்குமானால் அங்கே அவசியத்துக்கேற்ப இத்தண்டனைகளைக் கண்டிப்பாய் அமுல் செய்ய சர்க்கார் கருதியிருக்கிறார்கள்.

ஆனால், ஜனத்தொகைக் கணக்கெடுப்பில் கேட்டுத் தெரியப்படும் தகவல்கள் துல்லியமாயிருப்பது பூராவாகவும் பொது ஜனங்களையே பொறுத்திருக்கிறது. அவர்கள் தங்கள் சொந்த நன்மையை உத்தேசித்தே, தங்கள் வயது, விவாகமான நிலைமை, பொருளாதார நிலவரம், பிறரை அண்டியிருக்கும் நிலைமை முதலிய விவரங்கள் பற்றிச் சரியான தகவல்களைக் கொடுக்கவேண்டும். ஜனத்தொகைக் கணக்கு அறிக்கைகள் சொந்த விஷயம் பற்றியவையாக (அடையாளம் கண்டுகொள்ளக்கூடியபடி தனி நபர்கள் பற்றியவையாக) இராதகையாலும், ஜனத்தொகைக் கணக்கெடுப்பு தஸ்தாவேஜுகளில் உள்ள எந்தத் தகவலையாயினும் அதிகாரமில்லாத எவருக்கும் தெரிவிப்பது சட்டப்படிக்கான குற்றமாகையாலும் தங்கள் வயது பொருளாதார நிலைமை முதலியவைபற்றி யாரும் சரியான தகவல்களைத் தெரிவிக்கத் தயங்கவேண்டியதே இல்லை.

ஒவ்வொரு குடித்தனத்திலும் பொறுப்பான ஒருவர் இத்தகவல்களைத் திரட்டித் தயாராக வைத்திருந்து, குறிப்பெழுதுபவர் தம் வீட்டுக்கு வந்ததும் உடனடியாக அவரிடம் தெரிவிக்க வசதி செய்திருந்தால் ஜனத்தொகைக் கணக்கெடுப்பு வேலை பூராவுமே சுலுவாகிவிடும் என்பதோடு பொதுஜனங்களுக்கு அசௌகரியம் ஏற்படுவதும் குறையும்.

தேசீயத் திட்டங்களை வகுப்பது மக்களின் பொருளாதார நிலைமைகளை அடிப்படையாகக் கொண்டிருக்குமாதலால், நடக்கவிருக்கும் ஜனத்தொகைக் கணக்கெடுப்பின்போது, குடிஜனங்கள் சம்பந்தமாய்ப் பொருளாதாரத் தகவல் விவரங்களைச் சேகரிப்பதில்தான் முக்கிய கவனம் செலுத்தப்படும். எனவே, பொறுப்புள்ள ஒவ்வொரு நபரும் தம்மைத்தாமே இக்கேள்விகளைக் கேட்டுப் பார்த்துக்கொள்ளவேண்டும்; தாம் இன்னொருவர் சகாயமில்லாமல் ஜீவனம் செய்பவரா அதாவது, தமது சாப்பாட்டுக்கு வேண்டியதைத் தாமே தேடிக் கொள்கிறவரா அல்லது இன்னொருவரை அண்டியிருப்பவரா; இன்னொருவர் சகாயமில்லாமல் ஜீவனம் செய்பவராக இருந்தால், அவர் முதலாளியா, ஊழியரா அல்லது தனியாகத் தொழில்செய்பவரா; அவரது பிரதான ஜீவனோபாயம் என்ன; உபஜீவனோபாயங்கள் எவை. அவரது வருமானம் நிலபுலங்களிலிருந்து கிடைப்பதாயிருந்தால், அவர் தம்மை எந்தப் பிரிவில் சேர்த்துக்கொள்வார்— சொந்த நிலம் பயிரிடுபவரா, மற்றொருவர் நிலத்தைப் பயிரிடுபவரா அல்லது வேறொரு குடியானவர் அமர்த்தியுள்ள வேலையாளா, மற்றொருவர் சாகுபடி செய்யும் நிலத்திலிருந்து குத்தகை வாங்குபவரா? அவர் நிலபுலத்திலிருந்து சம்பாத்தியம் தேடாதவராக இருந்தால், தம்மை அவர் எந்தத் தொழில் செய்பவராகக் கருதிக் கொள்வார் — என்னும் கேள்விகளுக்கு அவரே பதில்களைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

ஜனத்தொகைக் கணக்கெடுப்பு அதிகாரிகள் பாகுபாடு செய்துள்ள பிரிவுகளின்படி சரியான பதில்களைப்பதிந்து கொள்வதற்கு வேண்டிய பயிற்சியைக் குறிப்பெழுதும் ஊழியர்களுக்கு சர்க்கார் அளித்துத் தேர்ச்சி பெறச் செய்திருக்கிறார்கள். கேள்விகளை விளக்கிக் கூறுமாறு சொன்னால் அவர்கள் நிச்சயம் உதவி செய்வார்கள்; ஆயினும், கேள்விகளுக்குத் துல்லியமான பதில்கள் கிடைப்பது பின்னும் பொதுஜனங்களைப் பொறுத்ததாகவே இருக்கும். குறிப்பெழுதுபவரும் பொதுஜனங்களும் ஒத்துழைத்தால், சுதந்திர இந்தியாவில் ஜனத்தொகைக்கணக்கெடுப்பு தேசத்தின் உண்மை நிலவரத்தை எடுத்துக் காட்டுவதாக இருக்கும்படி செய்வதற்கு எவ்வளவோ உதவியாக இருக்கும்.

## மாதிரி 'வோட்டு' பெட்டிகள்

வரப்போகும் பொதுத் தேர்தலில் உபயோகிப்பதற்காக பல்வேறு உற்பத்தியாளர்களால் தயாரிக்கப் பட்டு அனுப்பப் பட்டிருக்கும் பல தினுசான 'வோட்டு' பெட்டிகளின் மாதிரிகளைத் தேர்தல் கமிஷன் வாங்கிப் பரிசீலனை செய்திருக்கிறது. அவைகளில் சில பெட்டிகளைக் கமிஷன் அங்கீகரித்திருக்கிறது; மற்றவைகளை லாயக்கற்றவை என்று தள்ளியிருக்கிறது.

'வோட்டு' பெட்டிகள் தயாரிப்பதற்கு ராஜ்ய சர்க்கார்கள் சீக்கிரம் ஆர்டர் கொடுப்பதற்கு உதவும் பொருட்டு, அங்கீகாரத்துக்காக அனுப்பப்படும் மாதிரிப் பெட்டிகளை 1950 டிசம்பர் 31 உ-க்குப் பிறகு ஏற்றுக் கொள்ளக் கூடாது என்று கமிஷன் தீர்மானித்திருக்கிறது.

## இந்திய ஜவுளி ஏற்றுமதி

இந்திய சர்க்கார் உள்நாட்டு நிலைமையையும், வெளிநாட்டுத் தேவையையும் மேற்கொண்டு பரிசீலனை செய்தபிறகு, கடினசெலாவணிப்பிரதேசத்துக்கு 1951 ஜனவரி–ஜூன் கால அளவில் துணிமணி ஏற்றுமதி செய்வதற்காக மொத்தம் 2 கோடி கஜம் வரையில்தான் அனுமதித்து லைசென்ஸ் வழங்கவேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார்கள். இதையும் சேர்த்து, முரட்டுரக மத்யரகத்துணிகளின் மொத்த ஏற்றுமதிஅளவு இந்த ஆறு மாத காலத்துக்கும் 12 கோடிகஜம் ஆகிறது.

இதற்கு முன்னால் சுலப செலாவணிப் பிரதேசத்திற்கு முரட்டு ரக, மத்தியரகத் துணி ஏற்றுமதிக் கோட்டா 10 கோடி கஜம் என்றும், கடின செலாவணிப் பிரதேசத்திற்கு ஏற்றுமதி செய்ய முன்போல்தாராளமாக லைசென்ஸ் வழங்கப்படும்என்று இந்திய சர்க்கார் அறிவித்திருந்தது ஞாபகமிருக்கலாம்.

## பர்மாஅரிசி வருகை

நாட்டிங் ஹில் என்னும் கப்பல் பர்மாவிலிருந்து 9327 டன் அரிசியை ஏற்றிக்கொண்டு 1950 டிசம்பர் 17 உ யன்று கொச்சித் துறைமுகம் வந்துசேர்ந்தது. இந்த அரிசியில் 7327 டன் திருவாங்கூர்–கொச்சி ராஜியத்துக்கும் மீதி சென்னை ராஜியத்துக்கும் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

## ஐரோப்பாவில் ஜி.டி. நாயுடு

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

தொழிற்சாலையில் பௌண்டன் பேனக்களும் தயாராகின்றன. நானே வேலை செய்து ஒரு பேனவை தயாரித்தேன். அதையும் வேறு சில பேனக்களையும் எனக்குப் பரிசாக உவந்தளித்தார்கள்.

பின்னர் லாஸேன் நகருக்குத் திரும்பிவிட்டோம். இடையில் அமெரிக்கா போகலாமென்று ஒரு எண்ணம் உண்டாயிற்று. சிகாகோவில் வர்த்தகப் பெருங் கண்காட்சி ஒன்று நடைபெற விருந்தது. அங்கே போனல் இந்தியாவுக்கு வேண்டிய புது மாதிரியான யந்திரங்கள் சிலவற்றை வாங்கலாமல்லவா?

பிரயாண அனுமதி வேண்டுமென்று கோரி அமெரிக்க தூதராலயத்திற்கு விண்ணப்பித்திருந்தேன். போகவர டிக்கட் வாங்கிக்கொள்ளவும் அமெரிக்காவில் தங்கியிருக்கும் காலத்தில் தேவையான பண உதவிக்கு ஏற்பாடும் செய்து கொள்வதாயிருந்தால் அனுமதி கொடுக்கலாமென்று அறிவித்தார்கள். உடனே சென்னையிலுள்ள தாமஸ் கூக் கம்பெனியாருக்குத் தந்தி கொடுத்து அமெரிக்கா சென்றுவர பயணச்சீட்டு வாங்கி அனுப்புமாறு தெரிவித்தேன். இந்திய ரிசர்வ் பாங்கு அனுமதி கொடுக்க இசையவில்லையென்று பதில் வந்துவிட்டது. இந்த மறுப்பு நான் எதிர்பாராததல்ல. நான் சென்னையை விட்டுப்புறப்படும்போதே மிகக் குறைந்த அளவு டாலர் அனுமதிகூட எனக்குத்தர இந்திய ரிசர்வ் பாங்கு சம்மதிக்கவில்லை. தாமஸ் கூக் அண்டு சன் கம்பெனியார், லண்டனிலுள்ள இந்திய ஹைகமிஷனரை அணுகிப்பார்க்கும் படி எனக்கு யோசனை கூறினர்கள். இன்னமும் எனக்கு அவருடன் பேட்டி கிடைக்கவில்லை.

[தொடரும்]

## "துணை ஆகாரப் பொருள்கள்"

டிசம்பர் 22-உடன் துவங்கும் வாரத்தில் இந்திய சர்க்கார் திரைப்படத் தயாரிப்புப் பகுதியினரின் வெளியீடாகக் காட்சிக்கு வருகிற துண்டுப்படமான "துணை ஆகாரப் பொருள்கள்" சமனுணவுபற்றிய விவரங்களைப் போதிக்கிறது. அதில், தானியங்களுக்குப் பதிலாக பழங்கள், உருளைக்கிழங்கு, சேனைக்கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு முதலியவைகளைப் பயன்படுத்திக் கொள்வது சம்பந்தமான பிரச்னை அறிவு விளக்கரீதியில் தெளிவுபடுத்தப்படுகிறது.

விரயமாகும்சக்தியை மீண்டும் சரிசெய்வதற்காக நாம் உணவு உட்கொள்ளுகிறோம். மனித உடலைச் சரியாகப் பேணுவதற்கு இன்றியமையாத ஆகாராதிகள் எவையெவை யென்று விவரமாகவும் மனங்கவரும் வகையிலும் இத்துண்டுப் படம் எடுத்துக் காட்டுகிறது. உணவுப் பொருள்களின் ஒவ்வொரு பிரிவிலும் ஒருபொருளுக்குப் பதிலாக மற்றொரு பொருளை போஷணைத்தரம் குறையாதவகையில் எப்படி மாற்றி உபயோகித்துக் கொள்ளலாம் என்பதை இது சித்திரிக்கிறது.

# திக்கற்ற பாரதமே!

[வித்வான் வி. துரைசாமி]

1. விண்ணதிரும் இடிமுழக்கின் வேகம் பிழிந்தெடுத்து
மண்ணதிரும் வெற்றியெனும் மாருதத்தின் சூழலிலே
கண்ணதிரும் மின்னற் கனலைக் கலக்கியபின்
பண்ணிசையைக் கூட்டிப் படைலின் உருச்சமைத்தான்!

2. வேதன் வகுத்துவிட்ட வித்தகத்துப் பொற்குழந்தை
காதற் பெருக்கமுடன் கனகமணித் தொட்டிலிலே
நாதப் பெருமுழக்கில் நாளும் வளர்ந்தபின்பு
வாதம் புரிந்துவக்கில் வடிவாய்த் திகழ்ந்தானே!

3. பார்முழுதும் அதிசயிக்கப் பர்டோலிப் போர்முகத்துத்
தேர்செலுத்தித் தெவ்வர்தமைத் திக்குகளில் புறமோடச்
சீர்மிகுந்த அன்புச் சிலைவளைத்து வெற்றியெனும்
தார்புனைந்து நின்ற தகைமையினுக் குவமையுண்டோ?

4. பகலவனைக் கண்ட பனிமலர்போல், காந்திமுன்னே
தகவுடைய நாயகிபோல், தக்கதொரு சீடனைப்போல்,
அகமகிழப் போராடி அன்னைவிலங் கறுத்தபின்பும்
சுகமடையும் சாந்திதனைச் சுட்டெரித்துப் பணிபுரிந்தான்!

5. முடிச்சவிழ்ந்த நெல்லிக்காய் மூட்டையென, ஆங்கிலர்தாம்
கடிச்சமிழ்ந்த கனிகளெனச், சிதறிநின்ற காவலரை
அடிச்சுவட்டின் பின்வரவே அன்பால் பிணித்துவிட்டான்!
நடிச்சதொரு நாடகத்தின் திரைவிடுத்தே நடக்கலுற்றான்!





அணுசக்தி ஆராய்ச்சி நிலயத்தில்

## இந்தியாவுக்கு உணவு உதவி

அமெரிக்க ஜனப் பிரதிநிதி சபையில் குடியரசு கட்சியைச் சேர்ந்த ஜேகப்ஜேவிட்சு 1951-ல் இந்தியாவில் பஞ்சம் தோன்றாதபடி தடுக்க அதன் மக்களுக்கும் சர்க்காருக்கும் உதவ அமெரிக்க பார்லிமெண்ட் தீர்மானிக்கிறதென்ற தீர்மானத்தை கொண்டு வந்திருக்கிறார்.

## ஹிந்தியில் அவசர புத்தி வேண்டாம்

ஹிந்தி சாஹித்ய சம்மேளன மகா நாட்டிற்கு உள்நாட்டு மந்திரி சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி கீழ்கண்ட செய்தி அனுப்பியுள்ளார்:—

'ஹிந்தி ஆங்கிலம் போல செழித்து வளரட்டும் இந்தியாவில் பல மொழிகள் ஆயிரக்கணக்கான வருடங்களாக செழித்து வந்திருக்கின்றன ஆகவே ஹிந்தி விஷயத்தில் அவசர கோலம் கூடாது அப்படிநடந்து கொண்டால் கிழக்கேயும் தெற்கேயும் உள்ளவர்களுக்கு ஹிந்தியை தாய்பாஷையாகக் கொண்டவர்கள் பொது விவகாரங்களில் பிறபாஷைக்காரர்களை அடக்கி ஆட்சி செலுத்தும் கருவியாக ஹிந்தியை உபயோகிக்க முயல்கிறார்கள் என்றுதான் எண்ணம் ஏற்படும்இந்த எண்ணம் ஏற்படாமல் தவிர்க்கவேண்டும்ஆகவே அவசரஉற்சாகத்தைகாட்டிலும் மெதுவாக, தானகவே ஒன்று கலக்கும் உறுதியான மார்க்கம் தான் புத்திசாலிதனமானது.

## புராணப் பூட்டு

[4-ம் பக்கத் தொடர்ச்சி]

தான் உடனே கருத்து வேற்றுமை முளைக்கிறது. கம்ப ரசங்களும், சித்திர ராமாயணங்களும், இடைச்செருகல் ஆகிய வேதனைகள் தோன்றுகின்றன. கலையை அனுபவிக்க மாசுபடாத சாய்ந்தசையாத நேர்முனைத் தரசாக மனப்பக்குவம் அறுகுனர்ச்சி பெற்றிராத நாட்டில் கலைகள் வெறும் கேலிக்கூத்தாகி விடும். இராமகாதையை தகர்க்க முடியாதது போலவே அதைச்சிம்புவைத்துக் கட்டவும் யாரும் முயற்சிக்க வேண்டாம் என்பது "மயன்" வாதம். கலையின் பயன் கலைதான் என்ற கருத்துக்கு இந்தக்கோட்பாடு பொருந்தக் கூடும். குறிப்பிட்ட கலை தன் வடிவத்தைப் பெறத்தூண்டு கோலாயிருந்த உணர்வு இது அறிவுஇது என்று சோதித்துப் பார்க்க விரும்பும் உலகாயத அவசியம்படைத்தவர்கள் மேலும் கீழுமாகப் பிடித்து இழுக்கத்தான் செய்கிறார்கள். இவ்வளவுக்கும் தாக்குப்பிடித்து நிற்பதுதான் கலையின் பெருமை புராணம் ஒருபுரட்டோ அல்லது பூட்டோ அல்ல. அது ஒரு புராணமாகவேதான் இருக்கிறது. இருக்க வேண்டும், இருக்க முடியும் என்பதற்குமேல் என்ன சொல்ல இருக்கிறது.

ஃ ஃ ஃ

பழச்சுவையில் பெற்ற மெய்ப்பாடு இனிப்பா, கசப்பாஎன்பது இன்னமும் விளங்கவில்லை ஆனுலும் அடிநாவில் ஏதோ அனுபவங் குறிப்பு நிலைத்திருக்கிறது.

Edited, Printed and Published by Thiruloka-Sitharam, at the Hanuman Press, Samaspiran Street, Tiruchirapalli.